# கிழவனின் வருகை

ஜி.நாகராஜன்

காலை மணி பத்துதான் என்றாலும் சூரியன் நகரைச் சுட்டெரித்துக் கொண்டிருந்தான். வெளிறிச் சிவந்த வழுக்கை மண்டையிலும், முகத்திலும் வியர்வை முத்து முத்தாகக் கோர்த்தோட, நிமிர்ந்து நின்ற வண்ணம், கிழவன் அவன் முன்னிலும், பக்கலிலும் நகர்ந்த, நடந்த, ஓடிய, விரைந்த, பறந்த அத்தனையையும் கூரிய ஆசையோடும், வியப்போடும் நோக்கிக் கொண்டிருந் தான். வந்தனர் மூவர்; மூன்று காரிகையர் தம் வரிசை கலையாது நடைபாதையைக் கவர்ந்து வந்தனர். ஒருவர்மேல் ஒருவர் சறுக்கியும் சாய்ந்தும், சரிந்தும், கைகளை ஆட்டியும், தம் குதிரை வால் முடியினை ஊசலாட்டியும், எனினும் தம் வரிசை கலையாதே வந்தனர். கிழவன் நகர்ந்து கொண்டான்.

“என்னையா, நீ” என்ற குரல் கேட்டு, நெடிது நின்று பின்புறம் திரும்பினான் கிழவன். ஒரு செருப்புத் தைக்கும் தொழிலாளியின் ஒரு சதுரகஜ நடைபாதைக் ‘கடைக்குள்’ கிழவன் காலை வைத்திருந்தான். கிழவனின் பார்வை இயற்கையாகவே தொழிலாளியின் கரங்களில் விழுந்தது.

“ஏனப்பா, இப்படித் தைத்தால் தோலுக்குத் தோல் ஒட்டி நிக்குமா? நெருக்கமாகத் தை!” என்றான் கிழவன்.

''யாரய்யா, நீ?'' என்ற அவன், வேலையை நிறுத்திக் கொண்டு கிழவனை ஏறயிறங்கப் பார்த்தான்.

''நீ என்ன நம்ப ஆளா?''

''ஆம்'' என்றான் கிழவன்.

''என்னதான் நெருக்கத் தச்சாலும் நம்ப கைவேலே வெலெ போவதில்லையே?'' என்றான் அவன்.

''அதனாலே பரவாயில்லை. நீ ஒட்டுக்க நெருக்கமா கவே தை. நல்ல சரடாப் போடு. பார்...அட.. சரடு அறுந்து போச்சே!''

''நீ யாரு சாமி?''

''சாமீன்ட்டு சொல்லாதே. நா ஒருத்தன். இருக்கட்டும். இங்கே ஒரு கோவில் இருந்திச்சில்லே?''

''கோவிலா?''

''ஆமா, கோவில்தான். நீகூட ஒருதர போயிருப்பே யில்லே?''

''ஓ, கோவிலா?''

''ஆமாம், கோவில்தான்.''

''அதை இந்நேரம் அடச்சிருப்பாங்களே.''

''அடச்சிருப்பாங்களா?''

''ஆமாம், கோவில்லே ரெம்பத் திருட்டுப் போவுதுனு ஏதோ டைம் படிதான் அதெத் தெறக்கறாங்க, மூடறாங்க எங்களுக்கு அதெல்லாம்பத்தி என்ன கவலே?''

நகர் இரைந்து கொண்டிருந்தது. குழப்பம் இல்லாமல் குறுக்கும் நெடுக்குமாக, மேலும், கீழுமாக, அமைதியாக, ஆரவாரத்தோடு, உரத்த குரலில், சாகவாச நடையில், ஏக்கத்தோடு, நிறைவான நடையில், பீறிட்டுக் கொண்டு, கட்டுப்பாடாக, வெறித்தனமாக, அழகழகாக, நகர் இயங்கிற்று; நிமிடம் நிமிடமாக வளர்ந்தது. யாரும் கற்பனை செய்ய முடியாத அதன் வக்ரமான, தவிர்க்க முடியாத, திட்டமிட்ட, தலைவிதியை நோக்கி நகர்ந்து கொண்டிருந்தது.



கோவில் எங்கே என்றறியக் கிழவனுக்கு ஆசை. உருக்கி விட்ட வெள்ளியாய்த் தோன்றிய வானைப் பார்த்துவிட்டு, வாயில் அரைகுறையாய்க் கூடியிருந்த உமிழ்நீரைத் திரட்டித் தன் காலருகே உமிழ்ந்து கொண்டான். ''கோவில் எங்கே? கோவிலுக்குச் செல்ல வேண்டும்.'' கூட்டம் தாறுமாறாய் பின்னிப் படர்ந்தது... வருகிறார் பேராசிரியர். நிறைந்த தொந்தி, நிறைந்த உள்ளம். தேவைக்கும் மேலே பெரிது படுத்தப்பட்ட தடித்த கருத்த பிடிமானங்களைக் கொண்ட கண்ணாடியை அணிந்துள்ள பேராசிரியர், சாலை விதிகளைக் கவனித்தவாறே, ஆங்காங்கு எதிர்ப்படும் 'காலி கிளாத்' சேலைகளைக் காணாதவரே கண்டவராய் வருகிறார். கிழவனுக்கு அவர்மீது நம்பிக்கை. ''இங்கே பக்கத்லே ஒரு கோவில் உண்டே?'' சரித்திரப் பேராசிரியர் சட்டென்று நிற்கின்றார். ''யு ஆர் கரெக்ட். இங்கே ஒரு கோவில் இருந்தது. சுமார் இருபத்திமூன்று ஆண்டுகளுக்கு முன்னர். எக்ஸேக்டாகச் சொல்ல வேண்டுமானால் இருபத்துமூன்று ஆண்டுகள் ஏழு மாதங்களுக்கு முன்புதான் அதை ஷிப்டு பண்ணினோம். எனக்கு நன்றாக நினைவிருக்கிறது. மாநகராட்சி மன்றத்தில் அந்தத் தீர்மானம் ஏகமனதாக நிறைவேற்றிற்று. இன்றுவரை மாநகராட்சி மன்றத்தின் வரலாற்றிலே அதுதான் ஏகமனதாக நிறைவேற்றப்பட்ட ஒரே தீர்மானம், தோஸ் வேர் ஒண்டர்புல் டேஸ்!''....

''இப்ப அந்தக் கோவில் எங்கே?''

“அதோ, அங்கே. பக்கம்தான். எ குவெஸ்ச்சன் ஆவ் டிராஃபிக் ரெகுலேஷன். பட் தெ டெம்பிள் ஈஸ் தேர். ஆல் ரைட். இட் ஈஸ் தேர்” பேராசிரியர் சற்றுத் தொலைவில் அந்தப் பட்டப்பகலிலும் நியான் விளக்குகளால் வரையறுக்கப்பட்டிருந்த ஒரு வெண் சிமென்ட்டுக் கட்டடத்தைக் காட்டினார். கிழவன் வானத்தைப் பார்த்துக் கண்களைக் கண நேரம் மூடிவிட்டு, பேராசிரியரிடத்து,

“மன்னிக்கவும்” என்றான்.

“எதற்கு?” என்றார் பேராசிரியர்.

“உங்களுக்குத் தொந்தரவு கொடுத்ததற்கு.”

“இப்பவே போங்க கொஞ்சம் ஃபாரினர்ஸ் கூட்டம் தவிர அதிகக் கூட்டம் இருக்காது,” என்றுவிட்டு, பேராசிரியர் ஏதோ அந்நியரிடத்திலிருந்து விடை பெறுவது போல, கையைத் தலையில் இல்லாத தொப்பியைத் தொடும்முறையில் சமிக்ஞை செய்து நகர்ந்தார். நகர் இரைந்து கொண்டிருந்தது. கட்டுப்பாடாக, வெறித் தனமாக, அழகாக அது இயங்கிற்று.

கிழவன் தனது நா வறண்டிருந்ததை உணர்ந்தான். நகரின் குழப்பம் மிகுந்த பகுதிகளிலிருந்து மீண்டு சற்றே குழப்பம் இல்லாத பகுதி ஒன்றுக்கு வந்து சேர்ந்தான்.

“தண்ணி கெடெக்குமா?” என்றான் எதிர்ப்பட்ட ஒருவனிடத்து.

“தண்ணியா? நேராப் போயி இப்படித் திரும்பு. தண்ணி கிண்ணி எல்லாம் கெடெக்கும்.”

“நேராப் போயி?” என்றிழுத்தான் கிழவன்.



“இங்கே பார் கிழவா! அங்கிட்டு ஒரு வெளக்குத் தெரியுதா? செவப்பு வெளக்கு அதுக்கு நேரே போ.”

பட்டப்பகல்லே வெளக்கு எதுக்கு? கிழவன் அந்தச் சிறு தெருவோடே நடந்தான். இரு மருங்கிலும் ஒரே மாதிரியான வீடுகள். ஒவ்வொரு வீட்டின் முன்னும் ஒரு திண்ணை. திண்ணையின் ஒரு பகுதி சாக்குத் திரைபோட்டு மூடப்பட்டுள்ளது. திண்ணையில் வருவோர் போவோர் பார்க்கும் வண்ணம் ஒருவனோ, ஒருத்தியோ உட்கார்ந்திருக்கின்றனர். கிழவன் ஒரு வீட்டின் முன் நின்று தண்ணி கேட்கிறான். “உள்ளே போ” என்றான் அவன். கிழவன் திகைத்து நின்றான்.

“சுக்கா இருக்கு வேணுமா?” என்றாள் அவள். தொடர்ந்து அதற்குள்ளாக, “அக்கா மீன் வறுவல் இருக்கா?” என்று கேட்டுக்கொண்டு ஒருவன் வரவும், அவளது கவனம் கிழவனிடத்திருந்து புதிதாக வந்தவனிடத்துத் திரும்பியது. கிழவன் திருட்டுத்தனமாக அக்கம் பக்கம் பார்த்துவிட்டு, தெருவை விட்டுத் தப்பியோடினான்.

நகருக்கு நடுவே ஒரு அகன்ற சாக்கடை ஓடியது. கிழவன் எப்படியோ அதன் இருப்பிடம் கண்டு, பசும்புல் விளைந்திருந்த சகதியைத் தாண்டி, சாக்கடையின் ஓரத்தில் நின்று தாகசாந்தி செய்துகொண்டான். இருந்தாலும், வயிற்றிலே பசி. சாப்பிட்டு முப்பது நாட்களோ, நாற்பது நாட்களோ, அவனுக்கே நினைவில்லை. இருக்க வேண்டு மென்ற ஆசை. அதனால் சாப்பிடவேண்டும் என்ற எண்ணமும். சற்றுத் தொலைவில் இருந்த ஒரு பூங்கா வனத்துள் நுழைந்தான். பிச்சைக்காரக் குடும்பங்களும், உதிரிக் குஷ்டரோகிகளும் பூங்காவனத்தில் காணப் பட்டனர். முதலில் தன் கண்ணிற்பட்ட குஷ்டரோகியை,

கிழவன் விரித்த கைகளோடு அணுகவும், குஷ்டரோகி, கிழவன் தன்னருகே வருமளவும் குறும்புச் சிரிப்போடு பார்த்துவிட்டு, கிழவன் அவன் காலெட்டும் தூரம் வந்தவுடன் கிழவனை ஓங்கி உதைத்துவிட்டுக் கடகடவென்று சிரித்தான். ''கெட்ட காலத்துலே புண்ணியமா சம்பாதிக்க வந்தே? அங்கே குஷ்டரோகர் விடுதியிலே பணியாரெல்லாம் வேலை நிறுத்தம் செய்யறாங்க. அங்கே வேணாப் போ, புண்ணியம் சம்பாதிக்க. நல்லா உதை கிடைக்கும். நான் பாட்டு எழுதலாம்னு இங்கே ஒதுங்கிட்டேன். நாளெக் கழிச்சு விடுதி விழாக் கொண்டாடுறாங்க. மந்திரி வருவாரு. நீயும் சேர்ந்துக்க. கிழவா ஒன்னையும் பாராட்டுவாங்க. என்னைப் பொறுத்தவரை நான் வேலெ நிறத்தத்துக்கு முழு ஆதரவு தந்துட்டேன். நானும் ஸ்டிரைக் பண்ணிட்டு இங்கே வந்திட்டேன். எங்கூடயும் ஒரு பட்டாளம் வந்திரிச்சு.''

''நீங்க யாரு? ஒங்களே எனக்குத் தெரியும் போல்ருக்கே?''

''என்னெத் தெரியுமா? ஏது குஷ்டரோகிதானேன்னு நெனெக்கிறாயா? ஃப்ராய்டு யார் தெரியுமா ஒனக்கு?''

''தெரியாதே.''

''பைத்தியக்காரக் கிழவன் ஃபிராய்டைத் தெரியாதாம். நீ என்ன இந்த நகர்ல நடமாடுறே? ஆணும் பெண்ணும் என்னெல்லாம் செய்யறாங்க. எனனெல்லாம் நெனெக்கிறாங்க. அத்தனைக்கும் ஃபிராய்டு வெளக்கம் சொல்லி யிருக்கான் தெரியுமா? அதெல்லாம் வச்சு நாங் கதே எழுதறேன்; இலக்கியம் படைக்கிறேன்.''

''ஆமா, உங்க புண்ணுக்கு என்ன செய்யறீங்க?'' என்றான் கிழவன்.



''புண்ணு கூடப் பொறந்தது. அதுக்கு ஒண்ணும் செய்யக் கூடாதெங்கறாரு, டாக்டர்.''

''எல்லாத்துக்கும் மருந்து இருக்குன்னு நெனெக் கிறேன்.'' என்றான் கிழவன்.

''ஆமா, இருக்கு இருக்கு'' என்று கூறிக்கொண்டே, குஷ்டரோகி அருகே கிடந்த தடியை எடுத்துக் கிழவன் மண்டையில் ஓங்கி போடு போட்டான். கிழவன் ஒரு நிமிடம் கண்களை மூடிவிட்டுத் திறந்தான். ''இதுதான் மருத்துவம். பழைய சமுதாயத்தின் கருப்பைலேந்து புதுச் சமுதாயக் கொளந்தையை எடுக்க இந்த மருத்துவம்தான் வேணும். தெரியுமா? போ, நீயும் ஒரு கொளெந்தெயே பெத்துக்க.'' கண்ணில் ஒரு சொட்டு நீரோட, தலையைத் தடவியவாறே நடந்தான் கிழவன்.

என்றாலும் கிழவனுக்குப் பசி தாங்க முடியவில்லை. ஆமாம், கிழவனுக்குப் பசிதான். நடந்தான்; கள்ளுக் கடைகளையும் மாமிசக் கடைகளையும் கடந்து நடந்தான். நகரமே நண்பகல் உணவை நோக்கி விரைந்து கொண் டிருந்தது. அவனுக்கும் பசி. அவன் என்றும் பசியை வெறுத்ததில்லை. ஆனாலும் பல தடவைகளில் பசியையே புசித்து மகிழ்ந்திருக்கிறான். ஆனால் இப் பொழுது புசிக்க இடமெங்கே என்று ஒரு சிறுமியிடத்துக் கேட்டான். அவளது சிறுவிரல் ஒரு குடிசையைக் காட்டிற்று. கிழவனுக்கு மகிழ்ச்சிதான்.

குடிசைக்குள் நுழைந்தான். கிழவன் பதினெட்டு, இருபது பேர் உட்கார்ந்திருந்தனர். நான்கைந்து பேரைத் தவிர அனைவரும் திறந்த மார்போடு இருந்தனர். அனைவருக்கும் அரைகுறையாகத் தாடியும், மீசையும். தலைமுடி சிலருக்கு நீண்டு வளர்ந்தும், மற்றும் சிலருக்குக் கட்டையாகவும் இருந்தது. ஒருவர் முடியிலாவது

எண்ணெய்ப் பசை இல்லை. அவர்களுக்கு நடுவே ஒரு பெரிய அலுமினியத் தட்டு. தட்டில் தடித்து, அரைத்து விழுங்க முடியாத பெரிய பெரிய எலும்புத் துண்டுகள். தட்டைச் சுற்றிலும் இருந்த காலி பாட்டில்கள், மக்கிப் போன 'பௌரன்' நிறத்தைத் தாங்கி நின்றன. கிழவன் அந்த மனிதர்களிடத்துக் கேட்டான். ஒருவன் மற்றொருவனை நோக்கினான். மற்றவன் மூன்றாமவனை நோக்கினான். மூன்றாமவன் நாலாவது ஆளை நோக்கினான். ஒருவரையொருவர் நோக்கிக் கொண்டனர். யாரும் பேசவில்லை. கிழவன் தனக்குத் தெரிந்த மொழிகளிலெல்லாம் அவர்களோடு பேசிப் பார்த்தான். யாரும் பதில் பேசவில்லை. தாறுமாறாவென்று கிழவனை நோக்கினர். வாயைத் திறந்து வலது கையை வாயினருகே கொண்டு சென்று உணவு வேண்டும் என்று கிழவன் தெரிவித்துக் கொண்டான். அனைவரும் வாய்களைத் திறந்தனர். ஆசையோடு தத்தம் கைகளை வாயை நோக்கிக் கொண்டு சென்றனர். ''இருக்கா?'' என்பதுபோல் கிழவன் கையை அசைத்தான். ''இருக்கா?'' என்பது போலவே அவர்களும் தம் கைகளை அசைத்தனர். குடிசையைவிட்டு வெளியே வந்தான் கிழவன்.

குடிசையைக் காட்டிய சிறுமி கிழவனைக் கண்டு சிரித்தாள். ''ஏன் சிரிக்கறே குழந்தே?'' என்றான் கிழவன்.

''சாப்பாடு வேணுமா?'' என்றாள் சிறுமி.

''ஆமாம்'' என்று தலையசைத்தான் கிழவன்.

''அங்கே போனேயே, என்ன கெடெச்சது?''

''யாருமே பேசலயே?''

''அவுங்க எப்படிப் பேசுவாங்க? அவுங்க யாருக்கும் நாக்குக் கெடையாதே!''



''நாக்குக் கெடையாதா?''

''ஆமாம், ஒருத்தர் ஒருத்தர் நாக்கெ அறுத்துக் கிட்டாங்க.''

''எதுக்கு?''

''எதுதான் எதுக்கு? கிழவா, ஒனக்கு ஒண்ணும் புரியாது. ஒனக்கு இப்ப சாப்பாடு வேணும் இல்லையா?''

''ஆமா, கொஞ்சம் சாப்பிட்டா தேவலேன்னு தோணுது.''

''நர மாமிசம் சாப்பிடுவேயா?''

''நர மாமிசா?''

''அட கிழவா, பயந்து போய்ட்டியே! ஏதோ தென்கிழக்கு ஆசியாவிலிருந்தோ கிழக்கு ஐரோப்பாவிலிருந்தோ, புத்தம் புதுசாவோ, ஐஸ்பெட்டியில் வைத்தோ வர்ற நர மாமிசம்ன்ட்டு நெனெச்சிட்டியா? இல்லே, எல்லாம் லோக்கல் தான். நம்ம நகர் 'வணக்கத்துக்கு உரியவர்' இருக்காறே, அவா சம்பந்தி நடத்தற ஓட்டல்லே பிரியாணி சாப்பிடுறேயா? சுத்தமான நர மாமிசம், ஓட்டல் பெயர் 'திருமகள் புலாற் சோற்றாங்காடி'. அங்காடியின் உரிமையாளருக்கும் சுடுகாட்டுத் தலைமை வெட்டியானுக்கும் உள்ள பொருள் முதல் ஏற்பாட்டின்படி காவேக்காடு, அரைவேக்காடு சவங்களெல்லாம் நன்கே சிறிதும் காலங்கடத்தலின்றிப் புலால் சோற்றங்காடிக்கு வந்துவிடும். கிழவா, அங்கே போறேயா, இல்லை வாங்கி வரட்டுமா ஆயத்த ஊனுணவை.''

கிழவனுக்குக் கோபம் தாங்கவில்லை. அந்தச் சிறுமியின் இரு கரங்களையும் பற்றி அதன் இரு கன்னங்களிலும் மாறி மாறி அடித்தான். கிழவனின்

கரங்கள் வலுவானவை; அவற்றைக் கொண்டு மாறி மாறிச் சிறுமியின் கன்னங்களில் அறைந்தான். கிழவனின் கையும் புறங்கையும் சிவந்து சோர்ந்த பின்பு, மூடியிருந்த கண்களைத் திறந்து சிறுமி 'கொல்' லென்று சிரித்தாள். உதாசீனமாகத் தன் பிஞ்சுக் கால் கொண்டு கிழவனின் வயிற்றில் ஓங்கி உதைத்துத் தன்னைத் தானே விடுவித்துக் கொண்டு, இரண்டு கைகளையும் தன் இடுப்பில் மிடுக்காக அமைத்துச் சிரித்து நின்றாள். கிழவனுக்குத் தலை சுற்றியது. ஒரு நங்கை தனது தாலிக்கயிற்றை வெடுக் கென்று அறுத்தெடுத்து அவனது ஆண்குறியில் வீசியெறிவது போன்றதொரு பிரமை. கிழவன் திடுக்குற்றுக் கண்களை விழித்தான். சிறுமி இரண்டு கைகளையும் கேலிச் சிரிப்பில் தூக்கியவாறே அவன்முன் நின்று கொண்டிருந்தாள். அவளது வலது கைச் சிறுவிரல் துண்டுண்டு, இரத்தச்சிவப்பாய் இருந்தது.

''உன் பிஞ்சு விரலில் காணும் சிவப்பு என்ன?'' என்றான் கிழவன்.

''என் தாலியை அறுத்தெறிந்தேனே அதை நீ பார்க்க வில்லையா?'' என்றாள் சிறுமி, ஒரு இளநங்கையின் மர்மச்சினத்தோடு.

''நீ யார்?'' என்றான் கிழவன்.

''தறி என்னைக் காப்பாற்றவில்லையே; கை ராட்டினம் என்னைக் காப்பாற்ற முடியுமா என்றாளே; அவள் வயிற்றில் பிறந்தவள் நான்.''

''தறியையும், ராட்டினத்தையும் படைத்தவன் அவை தாம் தன்னைக் 'காப்பாற்றும்' என்றிருக்கலாமா?'' என்று கிழவன் கேட்கவும், சிறுமி அவனருகில் வந்து வெடுக்கென்று அவன்மேல் உமிழ் நீரைத் துப்பிவிட்டு ஓடினாள். கிழவன் சளைக்கவில்லை. ஓடி ஒரே நொடியில் அவளை எட்டிப் பிடித்தான். ''கிழவா இதெல்லாம் எப்போதுமே கொழப்பந்தான்'' என்று கூறிவிட்டு அவள் சிரித்தாள். கிழவன் அவளது கைகளை விடுவித்துவிட்டு நகர்ந்தான்.



உண்மையில் இப்பொழுது கிழவனுக்கு இருக்கும் ஆசையெல்லாம் எங்காவது நிம்மதியாகப் படுத்துறங்க வேண்டும் என்பதுதான். ஆனால் கால்களோ இழுத்தன. மைந்தனைக் காண வேண்டும் என்ற விருப்பம் உள்ளத்தி லிருந்து இறங்கிக் கால்களை ஆட்டி வைத்தது. மீண்டும் நகரின் குறுக்கு-நெடுக்கிலே அகப்பட்டுக் கொண்டு விட்டான். இதென்ன வேடிக்கை! மக்கள் நடமாட்டமே இல்லாத பெரும் பெரும் சாலைகள். சாலைகளின் இரு புறங்களிலும் நெடிதுயர்ந்த கட்டடச் சுவர்களிலெல்லாம் பெரும் பெரும் எழுத்துக்கள், ''அரசனுக்கே உங்கள் வாக்கு'', ''அரசிக்கே உங்கள் வாக்கு'', ''மந்திரிக்கே உங்கள் வாக்கு'', ''படைத் தளபதிக்கே உங்கள் வாக்கு'', ''அரசனின் ஆசைக் கிழத்திக்கே உங்கள் வாக்கு'', அரசனின் ஆசைக்கிழத்தியின் மகனுக்கே உங்கள் வாக்கு'', ''அரச குமாரனுக்கே உங்கள் வாக்கு'', ''அரச குமாரனின் காதலியின் கள்ளக் காதலனுக்கே உங்கள் வாக்கு'', அரசியின் தம்பி மனைவியின் கள்ளக் காதலனின் மைத்துனனுக்கே உங்கள் வாக்கு'', ''அரசனின் கோமாளிக்கே உங்கள் வாக்கு'', அரச கோமாளியின் மனைவியின் தம்பியின் மனைவிக்கே உங்கள் வாக்கு'', ''உண்மையைப்போற்றுவோர்க்கே உங்கள் வாக்கு'', அரசியின் தங்கையின் கள்ளக் காதலனின் உண்மை மனைவியின் சகோதரனுக்கே உங்கள் வாக்கு'', ''சோஷலிசத்துக்கே உங்கள் வாக்கு'', ''ஜனநாயகத்துக்கே உங்கள் வாக்கு'', ''புரட்சிக்கே உங்கள் வாக்கு'', ''பிற்போக்குக்கே உங்கள் வாக்கு''

''ஆள்பவருக்கே உங்கள் வாக்கு'', ''ஆளப் போவோருக்கே உங்கள் வாக்கு'',''மன்னனுக்கே உங்கள் வாக்கு'', ''மன்னனின் மக்களுக்கே உங்கள் வாக்கு''. - எத்தனையெத்தனை கோஷங்கள்! அத்தனையும் கண்டு, படித்து, கிழவன் சோரவில்லை. வேக வேகமாக அந்தக் கோஷப் பாலைவனத்தைக் கடந்தான். இரு மருங்கிலும் கோஷங்களைத் தாங்கிய சுவர்கள் இராக்கதர்கள் போல் நின்று கொண்டிருக்க, அவன் விரைந்து நடந்தான். ஆனால், கோஷங்களைத் தாங்கிய அவ் வெற்றுச் சுவர்களோ, நிமிடத்துக்கு நிமிடம் பலப்பல வண்ணங்கள் காட்டித் திசைமாற்றி, குறுக்கும், நெடுக்குமாய், இணைகூடி, இணை பிரிந்து இந்திரஜால வித்தைகள் காட்டின. கிழவன் ஒரு சிறு உருவமாய் அந்த மாயா ஜாலங்களினூடே சில சமயங்களில் கண்ணிற் படாமலும், சில சமயங்களில் கண்ணிற் பட்டும் ஒரு சிற்றெறும்பைப் போல வேகமாக ஓடியோடிப் போகிறான்...

எங்கே தான் சென்றாலும் கிழவனைச் சுற்றியிருந்த குழப்பம் குறையவில்லை. அலைந்து அலைந்து களைத்துப் போனான். மகனைக் காணவேண்டுமென்ற ஆசை; ஆனால் மகனின் பெயர் மறந்துவிட்டது. உருவம் மட்டும் தெட்டத் தெளிவாக மனதில் பதிந்திருந்தது. யாரிடம் சென்று என்ன விசாரிப்பது? கிழவனை யார் சட்டை செய்தனர்? கிழவன் நடந்தான். நகரின் நெரிசலைக் கடந்து சென்றான். எல்லாரும் சுற்றுப்புறத்தே கண்களை மூடிக்கொண்டே நடந்தனர். கண்களை மூடிக்கொண்டே வாகனங்களை இயக்கினர். வேகமாகப் பறந்தனர். பறந்து மீண்டும் மீண்டும் புறப்பட்ட இடத்தைக் கடந்தே விரைந்தனர். அனைவரும் பேசிக் கொண்டிருந்தனர். யாரும் காது கொடுத்து யாரையும்



கேட்கவில்லை. ஒருவரையொருவர் சேப்பிடி செய்து கொண்டனர். தன் பையிலிருந்து எது போகிறது என்பதைக் காட்டிலும் ஒவ்வொருவரும் யார் பையிலிருந்து எதை அபேஸ் செய்யலாம் என்பதிலேயே கவனமாக இருந்தனர். சமயத்தில், யாராவது ஒருவன் மற்றொருவனை ரகசியமாகக் கத்தியால் குத்திவிட்டு, ஏதோ தவறி அவன் காலை மிதித்து விட்டதுபோல், ''சாரி, மன்னிக்க வேண்டும்'' என்று கூறிக்கொண்டே நடந்தான். மாலை நேரமாதலால் ஆண், பெண் ஜோடிகள் தெருக்களில் பெருத்துவிட்டன. நைசாக, நாசூக்காக ஜோடிகள் ஜோடிமாறினர். நாசூக்குக்கு மட்டும் பஞ்சம் இல்லை. இன்னும் சில நிமிடங்களில் சொல்லி வைத்தாற் போல தெருவிளக்குகள் பட்டென்று கண்களைத் திறந்து கொல்லென்று சிரித்து நகரையே நீலத்திரையில் ஆழ்த்தி விடும். மேற்கே மலை வாயினுள் விழவிருந்த சூரியனைக் காணக் கிழவன் துடித்தான். நகரின் வெளிப்புறத்தை அடையவேண்டும் என்ற துடிப்பு. பைத்தியம் பிடித்தவன்போல ஓடத் தலைப்பட்டான். அங்கே நகரின் இடுகாட்டுக்கப்பால் இருந்த பாலைவனத்தில்தான் அவன் அவனது மகனைக் காண முடியும்.

களம் மாறுகிறது. நகரின் ஆரவாரம் ஏதோ கவனில் கேட்ட ஒலியாக மாறி நினைவிலிருந்து நழுவி மறைந்து விடுகிறது. நகரின் வெண்மையான கட்டடங்களின் தோற்றம் உருமாறி ஓர் அற்ப மேகச் சுருள்போல் காற்றில் சிதைந்து விடுகிறது. நடுவானில் அந்தகாரம் கவிந்து கிடக்க, மேலைச் சூரியன் மட்டும் செம்பிழம் பைக் கக்கிக்கொண்டு நீரில் தத்தளித்துக் கொண்டிருக்கும் ஒருவனது பீதியை முகத்தில் எழுதிக் காட்டுகிறது. தரையில் அலை அலையாக மணல். காரிருளில் தன்னந்தனியே மனிதர் சிலர் ரகசியமாகச் செஞ்ஜுவாலை

உலையில் படைக் கலன்கள் தயாரித்துக் கொண்டிருப்பது போன்றதொரு பிரமை. கிழவன் இருள்சூழத் தன்னந்தனியே நின்று கொண்டு அவனது கண்களை விரித்து மேலடி வானத்தைத் தன் பார்வையால் துழாவுகிறான். மிகத் தொலைவிலே இரு சிறு உருவங்கள் தென்படுகின்றன. சூரியனின் செவ்வொளியில் அக் கருவுருவங்களைக் கிழவன் காண முடிகிறது. அந்தப் பாலை மணலில் ஒட்டக நடையில் கிழவன் உருவங்களை அணுகுகிறான். அவன் உருவங்களை அணுகவும், அவை படிப்படியே வளர்ந்து மனித அளவை அடைகின்றன. அவற்றின் கருகிய உடல்களின்மீது சூரியனின் செவ்வொளி பட்டு அவை மாறி மாறிச் செம்மையையும் கருமையையும் பரிமாறுகின்றன. இரண்டு உருவங்களில் ஒன்றின் கையில் நீண்ட வாள்; மற்றதன் கையில் கூரிய ஈட்டி இரண்டும் ஒன்றையொன்று எதிர்த்து நின்றுகொண்டிருக்கின்றன. கொல்லன் பட்டறைச் சிவப்பு அவற்றின் உடலில் தகிக்கின்றது. பெற்ற நெருப்பை அவற்றின் கண்கள் கக்குகின்றன.

கிழவன் ஒருகணம் தன்னுணர்வு இழந்தான். அவனது மண்டைக்குள் நடந்த அக்காட்சியை அவனால் காணாமல் இருக்க முடியவில்லை. ராணுவ நிர்வாகத் திறமையோடு வேலை ஜரூராக நடந்து கொண்டிருந்தது. பிணங்களை மூட்டை மூட்டையாகக் கட்டி நிறுத்து லாரிகளில் ஏற்றிக் கொண்டிருந்தனர். முகாமின் தலைமை அதிகாரியும், அவரது பிரதம விஞ்ஞான ஆலோசகரும், முகாம் அமைத்து இரண்டு ஆண்டுகளாகியும், இதுவரை தத்தம் அறைகளை விட்டு வெளியே வராதவர்கள், முதன் முறையாக, வழக்கத்துக்கு மாறான ஓய்வு கொள்ளும் நிதானத்தோடு, வரிசை வரிசையாக நின்று கொண்டிருந்த லாரிகளின் அருகேவந்து நின்றனர். ''திட்டக்



குறிக்கோளை எட்டிவிட முடியுமா?'' என்கிறார் தலைமை அதிகாரி. ''நிச்சயம் முடியும். இதே வேகத்தில் கால்சிய உப்புக்கள் மட்டும் வருடத்துக்கு ஐம்பது லட்சம் டன் தேறும். அது மட்டுமல்ல; அமிலச் செலவை இரண்டு சதவீதம் உயர்த்தி நைட்ரஜன் உப்புக்களின் உற்பத்தியைப் பத்து சதவீதம் உயர்த்தமுடியும்'' என்றார் விஞ்ஞான ஆலோசகர். திடீரென்று அபாய அறிவிப்புச் சங்கு முழங்கவும் இருவரும் குடுகுடுவென்று பாதுகாப்புக் கிடங்கை நோக்கி ஓடினர். கிழவனுக்குத் தன்னுணர்வு வந்தது. ''நில்'' என்று உரக்கக் கூவினான். நீரிற் காணும் நிழற் சூரியனைப்போல் அடிவானத்துச் சூரியன் சிலிர்த்தது. இரு உருவங்களும் திகைத்ததுபோல் ஒருகணம் செயலற்று நின்றுவிட்டுக் கிழவனை நோக்கிய வண்ணம் இரண்டும் நெருங்கின. நெருங்கி ஒன்றாக இணைந்து, ஒரு கையில் வாளும், மறுகையில் ஈட்டியுமாக, இரு கண்களும் அனலைக் கக்கிய வண்ணம், ஒன்றாகிவிட்ட உருவம் கிழவனை வெறித்து நோக்குகின்றது.

''மைந்தா! உன்னைக் கண்டேனே!'' என்கிறான் கிழவன்.

''யார் உன் மைந்தன்?'' என்றிரைகின்றது உருவம்.

''நீதான் என் மைந்தன். உன்னைத் தேடித் தேடி என்கால்கள் சோர்ந்துவிட்டன. உன்னைக் காணாது என் இமைகளை மூடமுடியவில்லை. அந்த வாளும், ஈட்டியும் எதற்கு?''

உருவம் சிரித்தது.

''சட்டப்படி எனக்கு இப்போது தகப்பன் கிடையாது. நான் அவ்வுறவை ரத்துச் செய்து கொண்டதற்குச் சாட்சியாக உயர்நீதி மன்றத்தின் தீர்ப்பு என்னிடம் உள்ளது.''

''ஆம், உறவை முறித்துக் கொள்ளலாம். ஆனால் நினைவை அகற்ற முடியுமா? நான் உனக்குப் பேசக் கற்றுக் கொடுத்தேனே, அந்த நினைவை நீ அழிக்க முடியுமா?''

''பைத்தியக்காரக் கிழவா! நினைவுகள் வெறும் கற்பனையாக இருக்கலாமே? நித்தியமான உறவுகளே கிடையாது. காலாவதியான உறவுகளை வலிய நீடிக்க வைக்கும் நினைவின் சர்வாதிகாரத்தினின்றும் மனிதனைக் காப்பாற்றத் தான் சட்டங்களும், சட்டமன்றங்களும், வழக்குமன்றங்களும் தோன்றியுள்ளன.''

''மகனே கேள்! நீ இன்று பேசுவதே நினைவின் விந்தை தான். இப்பொழுது எவ்வளவோ உருமாறியிருந் தாலும், நீ பேசும்மொழி நான் கற்றுத் தந்த அதே மொழிதான். எனக்கு நன்றாக நினைவிருக்கின்றது. அன்றொரு நாள் காலையில், நம் குடிலுக்கருகே, இனிய மாங்கனிகள் பழுத்துத் தொங்கும் அந்த மரத்தடியில் பசுமையான வயல்கள் நம்முன் நெடிது விரிந்து கிடக்க, இனிமையான ஒளி நிறைந்த அமைதி நிலவிய அந் நேரத்தில், நான் கற்றுத்தந்த சொற்களுக்கு நீ தேமதுர மழலை வடிவம் தந்தாய். அதே நாள் மாலை, கருமேகங்கள் வானைச் சூழ்ந்து, இடியும், மின்னலும், புயற்காற்றும் உலகைச் சோதித்து விளையாடி, பேய்மழையைப் பொழிந்த நேரத்தில், அப்பேய்மையின் நர்த்தனத்தின் நடுவிலும் நான் உனக்கு எனது எளிய சொற்களைக் கற்றுத் தரவில்லையா? ஆம், பேரமைதி யினூடும், பேரரவத்தினூடும் நான் உனக்குப் பேசக் கற்றுக் கொடுத்தேன்.''

''கிழட்டுப் பைத்தியமே! நான் சொல்வதை நன்றாகக் கேள். நான் இன்று பேசுவது நீ கற்றுத் தந்த மொழியல்ல. உன்னுடைய அர்த்தமற்ற சொற்களின் வெறுமையி லிருந்து என்னை நான் என்றோ மீட்டுக்கொண்டு



விட்டேன். உன் கற்பனை உருவாக்கிய உன் மைந்தன் மறைந்துவிட்டான். உன்முன் இப்போது நிற்பவன் தனது நினைவுகளைச் சம்கரித்து விட்டவன்.''

''மைந்தா! நீ சொல்லும் ஒவ்வொரு சொல்லும் நீ இன்னும் உனது நினைவுகளிலிருந்து மீளவில்லை என்பதை உணர்த்தவில்லையா? வாழ்வுப் போதைக்கு ஆளாகாது வாழ்வின் இனிமையை அறி என்றேனே நினைவில்லையா? மலைபோன்ற லட்சியங்களால் மருண்டுவிடாது, வயிற்று வலியால் துன்புறும் குழந்தை களுக்கு நிவாரணம் தாவென்றேனே? கிழிந்த செருப்பைச் செப்பனிட முடியாதவன் இடிந்த வீட்டைக் கட்ட முடியாதென்றேனே? நீ எனது கீரைப் பாத்திகளைப் பார்த்து எள்ளி நகையாடினாய்; இன்று உன் மலர்த் தோட்டங்கள் வாடிச் சருகாகி விட்டனவே! தெரிந்த பொருளை உதாசீனப்படுத்தி, தெரியாத பொருளுக்காகக் குழம்பி நிற்கிறாய். அடுத்த அடி எதுவென்றறியாத நிலையில் நீண்ட நெடுஞ்சாலையில் முடிவைக் கற்பனை செய்து பார்க்க முயலுகிறாய். அச்சங்களும் விபரீத ஆசைகளும் உன் வாழ்வைச் சூறையாட, உன் வாழ்வின் வெறுமையை அந்த வாளும், ஈட்டியும் போக்க முடியுமா?''

''கிழவா! விரைவில் இவ்வாளால் உன் கழுத்தை வெட்டி, இவ்வீட்டியைக் கொண்டு உன் உடலைக் குத்தியெடுத்து உனது பெருமையை உலகு உணரச் செய்வேன். ஆனால் நீர் தாம் இருக்கையை, இல்லை வாழ்வை, இல்லை இல்லை மானுட மன உணர்வின் எல்லையை அறிந்தீர் என்று நான் ஒப்புக்கொள்ள முடியாது. எனது மலர்த்தோட்டங்கள் சருகாகி விட்டன. என வருந்தினீர்கள். அழகைப் படைக்கத் தலைப்படுவது தவறா? என்னை நீங்கள் வாளோடும், ஈட்டியோடும், கண்டது ஒரு தற்செயலான நிகழ்ச்சி. வேறு சந்தர்ப்பங்

களில் நீங்கள் என்னைச் சந்தித்திருந்தால், மலர் மாலையோடும், கவிதை ஏட்டோடும், வீணை கானத்தோடும், ஒளியின் கதியோடு விரையும் துகட்களோடும், முறை தவறாது இப்பூமியைப் போலவே சூரியனை வலம்வரும் செயற்கைக் கோளோடும் சந்தித்திருப்பீர். நான் மூடன். நான் வீணன். ஆனால் என்னிலும் மீறிய சக்தியொன்று என்னை, என்னையும் கடந்து எங்கோ கோடி கோடி காதங்களுக்கு அப்பால் இட்டுச் செல்கின்றது."

அவ்வுருவம் கூறியபடியே வாளால் கிழவனின் தலையை வெட்டியெறிந்துவிட்டு, ஈட்டியால் அவன் உடலைக் குத்தியெடுத்து மேல்வானக் கருமையில் ஈட்டியை நேர் செங்குத்தாகப் பிடித்து நின்றது. அப்பொழுதுதான் ஆயிரமாயிரம் பேர்கள் பலவகை மாமிசங்களையும் தங்களது முட்கரண்டிகளைக் கொண்டு குத்தியெடுத்து, வாயிலிட்டு மென்று கொண்டிருந்தனர். அப்பொழுதுதான் சில வைத்தியர்கள் ஒரு பிணத்தினுள் பிராண வாயுவைச் செலுத்தி அதனை மீண்டும் நினைவு பெற்றெழச் செய்ய முடியுமா என முயன்று கொண்டிருந்தனர். அப்பொழுதுதான் சில விஞ்ஞானிகள் மனிதத் திட்டத்தையும் மீறித் தோன்றிவிடும் கருவைச் சிதைக்க இலட்சிய முறையை ஆராய்ந்து கொண்டிருந்தனர். அப்பொழுதுதான் தகப்பனைக் கொன்றுவிட்ட இளைஞன் ஒருவன், தான் கொன்றது உண்மையில் தன் தகப்பன் இல்லை என்று நிரூபிப்பதற்காக, தன் தாய் ஒழுக்கம் கெட்டவள் என்று கோர்ட்டில் நிரூபித்து முடித்திருந்தான். அப்பொழுது தான்... அப்பொழுதுதான்... அப்பொழுதுதான்.. அப்பொழுதுதான்!

(ஜனவரி 1972)